உ

சிவமயம்.

திருப்போரூர்.

சிதம்பரசுவாமிகள்

இயற்றிய.

மதுரை.

மீனாட்சியம்மை

கலிவெண்பா.

பஞ்சரத்தினம்.

இவை

அஷ்டாவதானம்-பூவை,

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை
நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டன.

1892 ஹு.

கடவுள் துணை.

# மதுரை மீனாட்சியம்மை.

## கலிவெண்பா.

### வரலாறு.

இத்தமிழ் நாட்டிலே பரம்சிவம்அறு பத்து நான்கு திருவிளையாடல்செய்தருளிய மதுரைமாநகரத்திலிருந்து விருத்தாசலத்தில் ஒருபிரபு வீட்டிற்குவந்து சிதம்பரதேவர் கல்விகற்பிக்கும்பொழுது குமாரதேவராய்த்தடுத்தாண்டு உபதேசித்தபடி சகசானுபூதியில் நிற்கும்போது அம்மை மயிலாகவந்து மறைக்கக்கண்டு, அவர்தமது ஞானாசாரியாகிய குமாரதேவருக்குத்தெரிவிக்க, ஆசாரியர் அப்பா? உனக்கு உபாசனமூர்த்தம் யாதென்றுகேட்கசுவாமி! அடியேன்மது

ரையிலிருக்கும்போது மீனாட்சியம்மை
யை யுபாசித்துக்கொண்டிருந்தேனென
ஆகையால் நீயங்கே போய்த்தெரிந்து
கொள்ளென்று கட்டளையிட, இவரும்
அப்படியேபோய் அம்மையைநாடிஅரு
ந்தவஞ்செய்ய அம்மையெளிதில் வாரா
மையால் அவள்கிருபை பெறும்படிஇக்
கலிவெண்பாவைப் பாடியருளி அவள்
கட்டளையாள் திருப்போரூருக் கெழுந்
தருளினர்.

இதனை நித்திய பாராயணஞ் செய்ப
வர் அஷ்ட ஐசுவரியமும் மறுமையில்
மோட்சசாம் பிராச்சியமும் பெறுவார்
கள்.



உ

சிவமயம்.

திருப்போரூர்

# சிதம்பரசுவாமிகள்

இயற்றிய

# மதுரை மீனாட்சியம்மை

கலிவெண்பா

---

காப்பு.

அங்கயற்கு மாற்குமரிய
பெருமானிடஞ்சேர்
அங்கயற்கண்ணம்மைக்
கணியவே-அங்கயத்தின்
மாமுகங்கொள் கோமானை
வாழ்த்திக் கலிவெண்பா
நாமுகந்து பாடுவோ
நன்கு.

சீராரும் பூங்கமலத்
தெள்ளமுதே சேயிழையே
காராரு மேனிக்
கருங்குயிலே-ஆராயும்

வேதமுத லாகிநின்ற
மெய்ப்பொருளே மின்னொளியே
ஆதி பராபரையே
யம்பிகையே-சோதியே

அண்டமெல்லாம் போற்று
மரும்பொருளே யாரணங்கே
எண்டிசைக்குந் தாயான
வீஸ்வரியே-தெண்டிரையில்

வந்தவமுதே யென்று
மாறுமலே நினைப்பார்
சிந்தைதனி லேயுறையுஞ்
செல்வியே-அந்தமிலா

மாயோன் றனக்கிளைய
வல்லியே மாமயிலோன்
றுயே பராபரையே
சங்கரியே-தூயவொளி

மன்னுங் கயிலாச
மாமயிலே மேருவெனும்
பொன்னங் கிரியுடைய
பூங்கொடியே-அன்னமே

அட்ட குலவெற்பா
யமர்ந்தவளே யாதியந்த
மெட்டெட்டுந் தானு
யிருந்தவளே-முட்டவெங்கும்

அவ்வெழுத்தாய் நின்ற
வரும்பொருளே யாரணங்கே
உவ்வெழுத்தாய் நின்றதொரு
வுண்மையே-எவ்வெழுத்துந்

தானாகி நின்றதொரு
தற்பரமே யெவ்வுயிர்க்கும்
ஊனாகி நின்றதோ
ருத்தமியே-கோனாப்

படியளக்க லோகம்
பதினாலு மொக்க
அடியவரை யீடேற்று
மன்னா-முடிவிலா

ஓங்காரத் துட்பொருளே
யுற்றநவ் கோணத்தில்
ரீங்காரந் தன்னி
லிருப்பவளே-பாங்கான

முக்கோணத் துள்ளிருக்கு
மூர்த்தியே மூவிரண்டாஞ்
சட்கோணத் துள்ளிருக்குஞ்
சத்தியே-மிக்கபுகழ்

எண்ணிரண்டாங் கோட்டி
விருப்பவளே யெவ்வுயிர்க்கும்
பண்ணிசைந்த பாட்டின்
பரம்பொருளே-விண்ணுலகின்

மேற்பட்டங் கூடுருவி
மேலாகி நின்றதொரு
நாற்பத்து முக்கோண
நாயகியே-சீர்பெற்ற

பஞ்சகோணத் திருந்த
பைங்கிளியே பார்முழுதுந்
தஞ்சமது-வாகிநின்ற
தையலே-செஞ்சொன்மறைச்

சொல்லே பொருளே
சுவையே யறுசுவையே
யெல்லாப் புவிக்கு
மிறைவியே-தொல்லை

மீனாட்சியம்மை.

ஏறும்புகடை யானைதலை
　　யெண்ணிலுயிர்க்கு
முறும்பொருளா யங்கங்
　　குணர்வாய்ப்-பெறும்பயனால்

ஆறாறு தத்துவமா
　　யையிரண்டு வாயுவாய்க்
கூறாய்த் திசைபத்தின்
　　கூட்டமதாய்ப்-பேறான

அஞ்செழுத்தா யெட்டெழுத்தா
　　யைம்பத்தோ ரட்சரமாய்ப்
பஞ்ச வர்னமாய்ப்
　　பஞ்சதேவதையாய்-வஞ்சமற்ற

ஆறாதாரப் பொருளா
　　யையைந்தா யைம்மூன்றாய்
வீறான சக்கரத்தின்
　　மின்னொளியாய்க்-கூறுங்

கருவிகர ணாதிகளாய்க்
கைகலந்து நின்ற
பெரியதொரு மாயைப்
பிரிவாய்-உரியதொரு

தோத்திரத்திற் றோற்றமதாய்த்
தொக்கிற் பரிசமதாய்
நேத்திரத்திற் பேரொளியாய்
நின்மலமாய்-ஏத்தரிய

சத்த பரிசமதாய்
ரூபரச கந்தமதாய்
மத்தப் பிரமத்த
வைரவியாய்ச்-சுத்த

துரியமதாய்ப் பின்னுந்
துரியாதீ தத்தின்
அரிய சிலம்பொலியு
மார்ப்பத்-தெரிவரிதாய்

நாடுதனிற்சென்றிறந்து
நற்பவுரி கொண்டுதொந்தம்
ஆடுகின்ற பார்ப்பதியே
யம்பிகையே-நாடிக்

களங்கமறவேதான்
கரும்புருவந் தன்னிற்
பளிங்கொளியாய்
நின்றபரமே-வளம்பெறவே

கண்ணிரண்டி னுள்ளே
கருணைத்திருவடிவாய்ப்
புண்ணியமாய் நின்றருளும்
பூவையே-பண்ணமைந்த

நாசி நுனிமே
னடுவெழுந்த தீபமதாய்
ஓசைவிந்து நாதாந்தத்
துட்பொருளைப்-நேசமுடன்

அஞ்சு முகமா
யகண்டபரி பூரணமாய்ப்
பஞ்சபூ தம்மான
பைங்கிளியே-கஞ்சமலர்ப்

பாத மிரண்டாகிப்
பச்சைநிறந் தானுகி
ஆதிமுத லாகிநின்ற
வம்பரமே-தீதிலா

நெற்றிதனிற் கண்ணுகி
நிட்களரூபப் பொருளாய்
உற்றவெளி யாகிநின்ற
வுத்தமியே-பத்திநிறை

ஆகாயத் தின்னொளியா
யந்தரத்தின் ரூபமதாய்
மேகாதிக் குள்ளே
விளைபொருளாய்-வாகாம்

இடை பின்கலையா
யிரண்டுக்கு மெட்டாக்
கடையுஞ் சுழுமுனையாய்க்
காவாய்-மடலவிழ்ந்த

மூலாதா ரத்தொளியாய்
மும்மண் டலங்கடந்து
மேலாதா ரத்திருந்த
வெண்மதியாய்ப்-பாலூறல்

உண்ணுஞ் சிவயோக
வுத்தமியே மெய்த்தவமே
பண்ணுமறை வேதப்
பழம்பொருளே-எண்ணரிய

மெஞ்ஞான வித்தே
விளக்கொளியே மெய்ச்சுடரே
அஞ்ஞான மேயகற்று
மம்மையே-பைந்நாகம்

பூண்டசிவ னாரிடத்துப்
 பூங்கொடியே பாங்குடனே
தாண்டவம்மா டப்பவுரி
 தாளமொத்த-ஆண்டியுடன்

ஆடுங்கூத் தாடிச்சி
 யம்மனைபந் தாடிச்சி
தேடியுமால் காணுச்
 சிவசத்தி-நாடியுனைப்

போற்று மடியார்கள்வினை
 போக்கியே யஞ்சலென்று
தோற்றுகின்ற வம்மை
 துடியிடைச்சி-எத்தரிய

பச்சை நிறத்தி
 பவளக் கொடியிடைச்சி
கச்சைப் பொருமுலைச்சி
 கைவளைச்சி-கொச்சை

மலையரையன் பெற்ற
மலைச்சி கலைச்சி
நிலையறி வேதாந்த
நிமலி-அலையாத

அன்ன நடைச்சி
யருமறைச்சி யாண்டிச்சி
கன்னன் மொழிச்சி
கருணைச்சி பன்னுதமிழ்

வாய்ச்சி சடைச்சி
வடிவுடைய மங்கைச்சி
பேய்ச் சியிளமுலைச்சி
பேதைச்சி-காச்சியபால்

வெண்ணெய் மொழிச்சி
வெளிச்சி வெளியிடைச்சி
அண்ணுபுரந் தீயிட்ட
வம்படைச்சி-நண்ணிநரும்

கொப்புக் குழைச்சி
குவளை பொருவிழிச்சி
அப்புச் சடைச்சி
சிவாகமத்தி-மெய்ப்பாங்

கருப்புச் சிலைச்சி
கலைச்சி வலைச்சி
மருப்புத் தனத்தி
மவுனத்தி-பொருப்பிடத்தி

தாமப் புயத்தி
சமர்த்திதரு மத்தி
நாமச் சிவபுரத்தி
நாரணத்தி-தேமருவுங்

காரணத்தி பூத
கணத்தி தனபார
வாரணத்தி யட்டதிக்கு
மாரணத்தி-பூரணத்தி

பாத பரிபுரத்தி
　பங்கயத்தி செக்காத்தி
சோதி மணிநிறத்தி
　சொப்பனத்தி-பாதிமதி

சூடுகின்ற சொக்கருடன்
　றுய்யப்புலித் தோலுடுத்திக்
காடுதனில் வீற்றிருக்குங்
காரணியே-நாடறியுஞ்

சேணிச்சி நல்ல
　சிறுத்தொண்டன் பிள்ளையறுத்
தூணிச்சி நஞ்சமுதா
　மூணிச்சி-பாணிச்சி

பாசாங்கு சத்தி
　பாத்தி பருப்பதத்தி
காசாம்பூ மேனிக்
　கனதனத்தி-ஸ்ரீசிலா

அம்பரத்தி யைம்புலத்தி
யானவொருவேதாந்த
உம்பருக்கு மெட்டாத
வுத்தமச்சி-செம்பொன்வளைச்

செட்டிச்சி வையைதனிற்
சென்றுவெட்டி மண்சுமந்த
ஒட்டத்தி பூதியணி
யுத்தளத்தி-அட்டதிக்கும்

மின்னே விளக்கே
விலையில்லா சிவரத்நப்
பொன்னே நவமணியே
பூங்கிளியே - இன்னமுதே

மாணிக்க வல்லியே
மாமரகதப்பணியே
ஆணிக் கனகத்
தரும்பொருளே-மாணுற்ற

சிங்கார வல்லியே
செம்பொற் சிலைவளைத்த
கங்காளற் கன்பான
கண்மணியே-மங்காத

தெய்வக் குலக்கொழுந்தே
செம்பட் டுடைத்திருவே
ஐவருக்குந் தாயா
யமர்ந்தவளே-மெய்யருக்குச்

சித்தி கொடுக்குஞ்
சிவானந்தி யன்பருக்கு
முத்தி கொடுக்குஞ்ஞான
மூர்த்தியே-எத்திசைக்கும்

தாயானவளே யித்
தாவரசங்கம் விளக்குந்
தூயசுடர் மூன்றான
குக்குமமே-வேயின்ற

நித்திலமே கற்பகமே
நின்மலமே நன்மணியே
சுத்தபரி பூரணியே
சுந்தரியே-அத்தருடன்

வாதாடு மங்கையே
மாமந்த்ர ரூபியே
வேதாந்தி யேகமல
மெல்லியே-நாதாந்த

மாயே சுவரியே
மங்கையே மாமறைக்குந்
தாயாகி நின்ற
சரஸ்வதியே-காயாய்ப்

பழுத்த பழமாய்ப்
பழத்தின் ரதமாய்ப்
முழுத்த பராநந்த
முதலாய்-எழுத்துமுதல்

ஆறுசம யங்களுக்கு
எல்லவர்க்கும் வெவ்வேறாய்
வேறுபல ரூபாய்
விகற்பமதாய்-கூறரிதாய்

அங்கங்குந் தானா
யமர்ந்தவளே யாதியந்தம்
எங்கெங்குந் தானா
யிருந்தவளே-திங்கணுதல்

அஞ்சுகமே தேனே
யணங்கே யமுதமொழிக்
கிஞ்சுகமே பிஞ்சுமதிக்
கிள்ளையே-கொஞ்சுகுயில்

கன்னி திரிசூலி
கபாலி சிவகாமி
மன்னு கௌரி
மகமாயி-பொன்னின்மலர்த்

தாளி சதுரி
சவுந்தரிமுக் கண்ணுடைய
காளி பகவதி
கங்காளி-தூளியாத்

தக்கன் றலையறுத்த
தத்துவத்தி தற்பரத்தி
அக்கினியையீர்ந்த
வமர்க்களத்தி- மிக்கபுகழ்

வீரசத்தி மேருவினை
வில்லா வளைத்தவொரு
பாரசத்தி வேதப்
பராசத்தி-தாரணியுங்

கொண்டகா ரிச்சிக்குங்
குந்தளத்தி மாமதனன்
சண்டைக் காரிச்சி
சகலத்தி-துண்டமதிச்

செஞ்சடைச்சி கஞ்சுளிச்சி
செம்படத்தி கங்கணத்தி
பஞ்சசத்தி கொந்தளத்தி
பைம்பனத்தி-அஞ்சனத்தி

முத்துவடக் கொங்கைச்சி
முல்லைமுகிழ் நகைச்சி
பத்தரிட நெஞ்சகத்தி
பாரிடத்தி- சுத்தவெள்ளை

அக்கு வடத்தி
யறம்வளத்தி யன்புடைச்சி
செக்கரிளம் பிறைச்சி
சென்பகத்தி-தக்கமணி

ஓலைக் குழைச்சி
யுபதேச குண்டலச்சி
மாலைக் கழுத்தி
மௌனத்தி-ஞானமெல்லாம்

அக்காரத்தி பொக்கணத்தி
யண்டபகி ரண்டத்தி
முக்கணத்தி நிட்களத்தி
மோட்சத்தி-மிக்கபுகழ்

ஏகாட் சரத்தி
யியமப் ப்ருப்பதத்தி
நாகாதி பூண்டசிங்க
நாதத்தி-வாகான

பத்மா சனத்தி
பரிமளத்தி பாம்பணைத்தி
கற்டாந் தரத்தி
சருநிறத்தி-விற்காம.

வேடிச்சி நல்லதொரு
மீனவனுக் கன்றுமுடி
சூடிச்சி கொக்கிறகு
சூடிச்சி-நாடிச்சி.

பாதந் தனைத்தேடும்
பங்கயத்தில் வீற்றிருக்கும்
வேதன் றலையறுத்த
வித்தகத்தி-நீதிபுனே.

பாடகத்தி கிதப்ர
பந்தத்தி வெள்ளிமன்று
ளாடகத்தி கூட்லுக்கு
ளாதியே-ஏடெதிரே.

ஏற்றுவித்து முன்சமண
ரெண்ணுயிரங் கழுவில்
வீற்றிருக்க வைத்தமறை
வித்தகியே-நாற்றிசையும்.

கொண்டாடப் பெற்றதொரு
கோமளமே யாமளேயே
தண்டா மறைத்திருவே
தையலே-மண்டலங்கள்.

எங்குமொத்து நின்றருளு
மீஸ்வரியே மாமதுரை
அங்கையற்க ணாயகியே
யம்மையே-துங்க.

ஒளியே பெருந்திருவே
யோதிமமே யுண்மை
வெளியே ப்ரப்பிரம
வித்தே-அளிசேரும்.

கொந்தளக பந்திக்
குயிலே சிவயோகத்
தைந்தருவே மூவருக்கு
மன்னையே-எந்தனிட.

அல்லல் வினையெல்லா
மகற்றியே யஞ்சலென்று
நல்லசவு பாக்கியத்தை
நல்கியே-வல்லபத்தால்.

அஞ்சுமது ரஞ்சித்ர
வித்தார மென்றறிஞர்
பேசுகின்ற வுண்மைப்
பெருவாக்கும்-நேசமுடன்.

றந்தென்னை யாட்கொண்டு
சற்குருவா யென்னகத்தில்
வந்திருந்து புத்தி
மதிகொடுத்துச்-சந்ததமு.

நீயே துணையாகி
நின்றிரட்சி யங்கயற்கட்
டாயே சரணஞ்
சரண்.

மதுரை மீனுட்சியம்மை
கலிவெண்பா
முற்றிற்று.

———

கணபதி துணை.

## மதுரைமீனாட்சியம்மை மீது சொக்கநாதப்பிள்ளையாலியற்றிய

# பஞ்சரத்தினம்.

### வரலாறு.

இவ் வருஷத்துக்குமுன் சொக்கநாத பிள்ளை யென்கிற வோர் வித்வான் சண் பகநல்லூர் ஜமீன்தார்மீதில் வண்டுவிடு தூதென்கிற ஒரு பிரபந்தம் பாடிக்கொ ண்டு அந்தப்பிரபுவினிடத்துக்குப்போ க, அவ்விடத்திலிருந்த வித்துவான்கள் சண்பகப்பூவில் வண்டுவராது என்கின் றமையால் சண்பகநல்லூரில் வண்டுவிடு தூது செல்லாதென்றுசொல்ல, அதை யிந்த வித்துவான்கேட்டுவருத்தமுற்று

ஈஸ்வரிமீதில் இந்த பஞ்சாத்திரத்தைஅ
ந்தப்பிரபு சண்பகவனத்தி லிருக்கும்
போது அவர் சமுகத்தில் பாடினவுட
னே சர்வலோக ரக்ஷகியாகிய ஈஸ்வரிகி
ருபையால் வண்டுவந்து சண்பகமலரிலி
ருந்து மதுவுண்டு அந்ததப்பிரபுவின் ம
டியில்வந்திறங்கினதால் அந்தப்பிரபுஇ
ந்தப் பிரபந்தத்துக்கும் மேற்சொல்லி
ய வித்துவானின் பக்திக்கும் மகிழ்ந்து
அவருக்குப் பரிசுகொடுத்தனுப்பினர்.

ஆதலால் இந்தப் பிரபந்தத்தை யாவ
ரும் காலையிலும் மாலையிலுந் துதிக்கக்
கடவர்களாக.

கணபதிதுணை.

மதுரைமீனாக்ஷியம்மை மீது
சொக்கநாதப்பிள்ளையாலியற்றிய

# பஞ்சரத்தினம்.



மீனென்னதாயதன் குஞ்சென்னபிள்ளையதில் வீட்சணகடாட்சமென்ன, விதுவென்ன நீயென்ன மீனாட்சியறியாததோ, தானென்னதாயிவன் றானென்ன பிள்ளையென் றனையுமுனையும் பழிக்குந், தவறென்ன சற்றும்ட்டோவாறு மென்னவூர் தன்னைவாய்மூடலாமோ, கானென்னசேர்லையோ மலையென்ன மேடையோ கடலென்ன வோடையோவென், காலென்ன மாமோவென் மேலென்ன வயிரமோ கடையனே னலையவசமோ மாமென்ன மீனென்ன வாளென்னவேலென்ன மருளவருளமரும்விழியாய், ம

துரித்த மொழியிட்டு மதூரத்தை விலை யிட்ட மதுரைக்கயற்கண்ணியே.

எண்பத்துநான்குலட் சஞ்ஜீவபேத த்தில் யானுமொன்றுன தில்லை, யென்க விதுலைப்பதுன் முப்பத்திரண் டறத்தி னு மில்லையுன்கணவனுர், பண்பெற்றவ றுபத்து நான்குவிளை யாடலிற்பழிதன க்கஞ்சவில்லை, பாவியேன் செய்தபுண் ணியமொன்று மில்லையென்பாடெலாம் வந்துசொல்ல, கண்பெற்றபேரிலை யுன க்குமொரு பொருளிலைக் கவனமாய்க் கேட்டொருத்தன், காதிலேசொல்லவும் வாயிலைநீசெயுங் கபடகதையினு மில்லை யே, மண்பெற்றம்லைபெற்றவன்னெஞ் சி கன்னெஞ்சி யென்பதனில் வழுவுமி ல்லை, மதுரித்தமொழியிட்டுமதூரத்தை விலையிட்ட மதுரைக்கயற் கண்ணியே.

பழக்குண்டுவருகலிப்பாடு நின்செவி யிற் படாமலிரு கொப்புண்டுநீள், பார் வை வெம்போருண்டு பங்கயத்தேனுக ரு டாட்டளி கிடந்துகுமுறு, முழக்கு ண்டு சரியஞ்சுகந்தச் சொருக்குண்டு மு த்தாணி புழுகுண்டுமால், முன்னிட்ட முத்து முருகுண்டுசெவிமேலிட்ட மு கையவிழு நீலம்விடுதே, ஞெழுக்குண் டுமகரந்த முகிருண்டுமற்றிவை யொழி ந்துநீ கேட்டுவிட்டா, லுன்வாயின்முத் துண்டு சிந்துண்டு பேரமெந்த னுடனி ன்று பேசாமலுன், வழக்குண்டு நீயுண் டு கதியுண்டெனக்கருதி வந்தகிற் கவ லையுண்டோ, மதுரித்தமொழியிட்டு ம துரத்தை விலையிட்ட மதுரைக்கயற் க ண்ணியே. (௩)

பாதத்திலேயிடமு நயனத்திலேயரு ளும் பகர்மொழியிலே யன்புமாய்-பரு வத்திலேவந்து பக்கத்திலேநின்று பா தத்திலேகவிதையு, நீதத்திலே மனமு நெஞ்சத்திலேயறிவு நியமத்திலேயுரை ப்பு-நேயத்திலேகனிவு மாயத்திலேமு னிவுநீதந்திடாமலேபோய், காதத்திலே நின்று கள்ளத்திலே தள்ளவுள்ளத்தி லேகருதினாய்-கதியெனக்குன்னடிக் கம லத்திலேதருவ் தினியெந்தகாலத்திலே மாதத்திலே யெந்தவாரத்திலே யெந்த நேரத்திலேவழங்க-மதுரித்த மொழியி ட்டு மதுரத்தைவிலையிட்ட மதுரைக்க யற்கண்ணியே. (௪)

தாவென்றுகேட்பதுன் சாயுச்சியபத மன்றுசாரூபமன்றுமற்றச் - சாமீபமன் றுநின் சாலோகமன்றுனது சரணாவிந்

தமன்று, பூவன்றுவெள்ளிப் பொருப்ப
ன்றுபொன்னுலகமன்று பொன்மலையும
ன்று-புவலோகதவலோக சத்தியலோக
முமன்று பூவுலகமன்று மற்றப்பரவன்
று நாவன்று கண்ணன்று காதன்றுபண
மன்று காசன்றுகாண்- பக்தசனமென்று
னைப் பணிகின்றபேரிடப் பாததூளிக்
குள்தூளி, வாவென்றழைத்தென்று த
ருவையோ வென்றுதின மனமென்று
முருகவசமோ மதுரித்தமொழியிட்டு
மதுரத்தை விலையிட்ட மதுரைக்கயற்
கண்ணியே. (௫)

மதுரைமீனாக்ஷியம்மைபஞ்சரத்திநம்
முற்றிற்று.

